முழுப்பதிப்புரிமையுடையது

அந்தரங்கமானது



# இலங்கை பரீட்சைத் திணைக்களம்

# க.பொ.த. (சாதாரண தர)ப் பரீட்சை - 2022 (2023)

# 16 - இஸ்லாம்

## புள்ளியிடும் திட்டம்



இந்த விடைத்தாள் பரீட்சகர்களின் உபயோகத்துக்காகத் தயாரிக்கப்பட்டது. பிரதம பரீட்சகர்களின் கலந்துரையாடல் நடைபெறும் சந்தர்ப்பத்தில் பரிமாறிக் கொள்ளும் கருத்துக்களுக்கிணங்க, இதில் உள்ள சில விடயங்கள் மாறலாம்.

இறுதித் திருத்தங்கள் உள்ளடக்கப்படவுள்ளன.

**இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்**

**க.பொ.த (சா.தர)ப் பரீட்சை – 2022 (2023)**

**16 – இஸ்லாம்**

**புள்ளி வழங்கும் திட்டம்**

**இஸ்லாம் I**

**1 ஆம் வினாத்தாள் 40 வினாக்கள்** 1 x 40 = 40 **புள்ளிகள்**

**இஸ்லாம் II**

**1 ஆம் வினா கட்டாயமானது**
**ஒவ்வொரு பிரிவுக்கும் 2 புள்ளிகள் விதம் பத்து வினாக்கள்** 2 x 10 = 20 **புள்ளிகள்**

**2 முதல் 7 ஆம் வினாக்கள்**
**தெரிவு செய்யப்பட்ட 4 வினாக்களுக்கு** 4 x 10 = 40 **புள்ளிகள்**

**மொத்தம் - 100 புள்ளிகள்**

பகுதி வினாக்களுக்களுக்கான புள்ளிகள்
**2ம் வினாவிலிருந்து 6 ஆம் வினா வரை)**

i. பகுதி **02 புள்ளிகள்**
ii. பகுதி **03 புள்ளிகள்**
iii. பகுதி **05 புள்ளிகள்**
**10 புள்ளிகள்**

**07 ஆம் வினாவில் தெரிவு செய்த இரு பகுதிகளுக்கு**

i. பகுதி **05 புள்ளிகள்**
ii. பகுதி **05 புள்ளிகள்**
**10 புள்ளிகள்**

**வினாத்தாள் I மொத்தம் 40 புள்ளிகள்**
**வினாத்தாள் II மொத்தம் 60 புள்ளிகள்**
**100 புள்ளிகள்**

## க.பொ.த (சா.தர)ப் பரீட்சை - 2022 (2023)

## விடைத்தாள்களுக்குப் புள்ளியிடல் - பொது நுட்ப முறைகள்

விடைத்தாள்களுக்குப் புள்ளியிடும் போதும், புள்ளிப்பட்டியலில் புள்ளிகளைப் பதியும் போதும் ஓர் அங்கீகரிக்கப்பட்ட முறையைக் கடைப்பிடித்தல் கட்டாயமானதாகும். அதன்பொருட்டு பின்வரும் முறையில் செயற்படவும்.

1. சகல உதவிப் பரீட்சகர்களும் விடைத்தாள்களுக்குப் புள்ளியிடுவதற்கு சிவப்பு நிற குமிழ்முனை பேனாவை பயன்படுத்தவும்.
2. பிரதம பரீட்சகர்கள் ஊதா நிறக் குமிழ் முனை பேனாவினை விடைத்தாள்களை புள்ளியிடுவதற்குப் பயன்படுத்தவும்.
3. சகல விடைத்தாள்களினதும் முதற்பக்கத்தில் உதவிப் பரீட்சகரின் குறியீட்டெண்ணைக் குறிப்பிடவும். இலக்கங்கள் எழுதும்போது **தெளிவான இலக்கத்தில்** எழுதவும்.
4. இலக்கங்களை எழுதும்போது பிழைகள் ஏற்பட்டால் அவற்றைத் தனிக்கோட்டினால் கீறிவிட்டு, மீண்டும் பக்கத்தில் சரியாக எழுதி, ஒப்பம் இடவும்.
5. ஒவ்வொரு வினாவினதும் உபபகுதிகளின் விடைகளுக்காக பெற்றுக்கொண்ட புள்ளியை பதியும் போது அந்த வினாப்பகுதிகளின் இறுதியில் △ இன் உள் பதியவும். இறுதிப் புள்ளியை வினா இலக்கத்துடன் □ இன் உள் பின்னமாகப் பதியவும். புள்ளிகளைப் பதிவதற்கு பரீட்சகர்களுக்காக ஒதுக்கப்பட்ட நிரலை உபயோகிக்கவும்.
6. எண்கணித பரீட்சகரினால் புள்ளிகள் பிழையற்றது என உறுதிப்படுத்த நீலநிற அல்லது கருப்புநிறப் பேனாவினை உபயோகிக்கவும்.

**உதாரணம் - வினா இல 03**

(i) ..........................................................................

..........................................................................

..........................................................................

(ii) ..........................................................................

..........................................................................

..........................................................................

(iii) ..........................................................................

..........................................................................

..........................................................................

03 (i) $\frac{4}{5}$ (ii) $\frac{3}{5}$ (iii) $\frac{3}{5}$ $\frac{10}{15}$

**பல்தேர்வு விடைத்தாள்**

01 **துளைத்தாள் தயாரித்தல்**

i. புள்ளி வழங்கும் திட்டத்தின் படி சரியான தெரிவைத் துளைத்தாளில் அடையாளமிடவும்.

ii. அவ்வாறு அடையாளமிடப்பட்ட இடத்தை வெட்டி நீக்கித் துளைத்தாளைத் தயாரிக்கவும்.

iii. துளைத்தாளை விடைகளின் மீது சரியாக வைத்துக்கொள்ளக்கூடியதாகச் சுட்டெண் அடைப்பையும் வெட்டி நீக்கவும். சரியான விடைகளின் எண்ணிக்கையைக் காட்டும் அடைப்பையும் வெட்டி நீக்கவும்.

iv. சரியான, பிழையான விடைகளை குறிப்பிடக்கூடியதாக ஒவ்வொரு வரிசைக்கும் இறுதியில் வெற்று நிரையொன்றை வெட்டி ஏற்படுத்திக் கொள்ளவும்.

v. **வெட்டிக்கொண்ட துளைத்தாளில் பிரதம பரீட்சகரிடம் கையொப்பம் பெற்று அங்கீகரித்துக் கொள்ளவும்.**

2. அதன் பின்னர் விடைத்தாளை நன்கு பரிசீலித்துப் பார்க்கவும். ஏதாவது வினாவுக்கு, ஒரு விடைக்கும் அதிகமாக குறியிட்டிருந்தாலோ, ஒரு விடைக்காவது குறியிடப்படாமலிருந்தாலோ தெரிவுகளை வெட்டிவிடக்கூடியதாக கோடொன்றைக் கீறவும். சில வேளைகளில் பரீட்சார்த்தி முன்னர் குறிப்பிட்ட விடையை அழித்துவிட்டு வேறு விடைக்குக் குறியிட்டிருக்க முடியும். அவ்வாறு அழித்துள்ள போது நன்கு அழிக்காது விட்டிருந்தால், அவ்வாறு அழிக்கப்பட்ட தெரிவின் மீதும் கோடிடவும்.

3. துளைத்தாளை விடைத்தாளின் மீது சரியாக வைக்கவும். சரியான விடையை ✓ அடையாளத்தாலும் பிழையான விடையை X அடையாளத்தாலும் இறுதி நிரலில் அடையாளமிடவும். சரியான விடைகளின் எண்ணிக்கையை அவ்வவ் தெரிவுகளின் இறுதி நிரையின் கீழ் எழுதவும். அத்துடன் அவற்றை கூட்டி சரியான புள்ளியை உரிய கட்டத்தில் எழுதவும்.

**கட்டமைப்பு கட்டுரை மற்றும் கட்டுரை விடைத்தாள்கள்**

1. பரீட்சார்த்திகளால் விடைத்தாளில் வெறுமையாக விடப்பட்டுள்ள இடங்களையும், பக்கங்களையும் குறுக்குக் கோடிட்டு வெட்டிவிடவும். **பிழையான பொருத்தமற்ற விடைகளுக்குக் கீழ் கோடிட்டு பிழையிடவும் புள்ளி வழங்கக்கூடிய இடங்களில் ✓ அடையாளமிட்டு அதனைக் காட்டவும்.**
2. புள்ளிகளை ஓவலண்ட் கடதாசியின் இடது பக்கத்தில் குறிக்கவும்.
3. சகல வினாக்களுக்கும் கொடுத்த முழுப் புள்ளியை விடைத்தாளின் முன் பக்கத்திலுள்ள பொருத்தமான பெட்டியினுள் வினா இலக்கத்திற்கு நேராக **2 இலக்கங்களில் பதியவும்.** வினாத்தாளில் உள்ள அறிவுறுத்தலின் படி வினாக்கள் தெரிவு செய்யப்படல் வேண்டும். எல்லா வினாக்களினதும் புள்ளிகளும் முதல் பக்கத்தில் பதியப்பட்ட பின் விடைத்தாளில் மேலதிகமாக எழுதப்பட்டிருக்கும் விடைகளின் புள்ளிகளில் குறைவான புள்ளிகளை வெட்டி விடவும்.
4. மொத்த புள்ளிகளை கவனமாக கூட்டி முன் பக்கத்தில் உரிய கூட்டில் பதியவும். விடைத்தாளில் ஒவ்வொரு விடைக்கும் வழங்கப்பட்டுள்ள புள்ளிகளின் தொகையினை ஒவ்வொரு பக்கமாக கூட்டவும் அக்கூட்டுத்தொகை உங்களால் முன்பக்கத்தில் மொத்தம் எனக் குறிப்பிட்ட மொத்தப்புள்ளிகளுக்கு சமமானதா? என பரீட்சிக்கவும்

✶ **புள்ளிப்பட்டியல் தயாரித்தல்**

i. ஒரு வினாப்பத்திரம் உள்ளபாடங்கள் தவிர ஏனைய சகல பாடங்களுக்குமான இறுதிப்புள்ளி குழுவினுள் கணிப்பிடப்படமாட்டாது.
ii. ஒவ்வொரு வினாப்பத்திரத்துக்குமான இறுதிப்புள்ளி தனித்தனியான புள்ளிப்பட்டியலில் பதியப்பட வேண்டும்.
iii. வினாப்பத்திரம் I இற்கான புள்ளிப்பட்டியலில் "**Total Marks**" என்ற நிரலில் **பதிந்து எழுத்திலும் எழுத வேண்டும்.**
iv. வினாப்பத்திரம் II இற்கான புள்ளி பட்டியலிலை தயார் செய்யும் போது பகுதிப்புள்ளிகளை பதிவதோடு வினாப்பத்திரம் II இன் இறுதிப்புள்ளியை புள்ளிப்பட்டியலின் "**Total Marks**" என்ற நிரலில் பதியவும்.
v. 43 சித்திரப் பாடத்திற்குரிய I, II, மற்றும் III ஆம் வினாப்பத்திரங்களுக்குரிய புள்ளிகளை தனித்தனியாக புள்ளிப்பட்டியலில் பதிந்து **எழுத்திலும் எழுதுதல் வேண்டும்.**
vi. 21 - சிங்களமொழியும் இலக்கியமும், 22 - தமிழ்மொழியும் இலக்கியமும் ஆகிய இரு பாடங்களும் வினாப்பத்திரம் I இற்குரிய புள்ளி புள்ளிப்பட்டியலில் பதிந்து எழுத்திலும் எழுத வேண்டும். வினாப்பத்திரம் II, III இற்கான பகுதிப் புள்ளிகளை உள்ளடக்கி அவ்வினாப்பத்திரத்தின் மொத்தப் புள்ளிகளை புள்ளிப்பட்டியலில் பதிய வேண்டும்.

**முக்கியக் குறிப்பு :**

i. சகல சந்தர்ப்பங்களிலும் ஒவ்வொரு வினாப்பத்திரத்திற்கும் உரிய முழுப்புள்ளியானது **முழுத்தானத்தில்** வினாப்பத்திரம் I, II மற்றும் III என்ற புள்ளி பட்டியலின் உரிய நிரலில் நிரலில் உரிய வகையில் பதிதல் வேண்டும். எந்தவிதமான காரணங்களிற்காகவும் வினாப்பத்திரத்தின் இறுதிப்புள்ளியானது **தசம தானங்களில் அல்லது பின்னத்தில் பதியப்படலாகாது.**
ii. புள்ளி பட்டியலில் சகல பக்கங்களிலும் புள்ளிகளை பதிந்த உதவிப் பரீட்சகர், புள்ளிகளை சரிபார்பார்த்த உதவி பரீட்சகர், புள்ளிகளை பரீட்சிக்கும் எண்கணித பரீட்சகர் (EMF) மற்றும் பிரதம பரீட்சகர் ஆகியோர் தமது குறியீட்டு இலக்கத்தை எழுதி கையொப்பமிட்டு உறுதிப்படுத்துவது கட்டாயமாகும்.

ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව / முழுப் பதிப்புரிமையுடையது /All Rights Reserved]

ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்
Department of Examinations, Sri Lanka

**16 T I, II**

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (සාමාන්‍ය පෙළ) විභාගය, 2022(2023)
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (சாதாரண தர)ப் பரீட்சை, 2022(2023)
**General Certificate of Education (Ord. Level) Examination, 2022(2023)**

ඉස්ලාම් I, II
இஸ்லாம் I, II
Islam I, II

පැය තුනයි
மூன்று மணித்தியாலம்
Three hours

අමතර කියවීම් කාලය - මිනිත්තු 10 යි
மேலதிக வாசிப்பு நேரம் - 10 நிமிடங்கள்
Additional Reading Time - 10 minutes

வினாப்பத்திரத்தை வாசித்து, வினாக்களைத் தெரிவு செய்வதற்கும் விடை எழுதும்போது முன்னுரிமை வழங்கும் வினாக்களை ஒழுங்கமைத்துக் கொள்வதற்கும் மேலதிக வாசிப்பு நேரத்தைப் பயன்படுத்துக.

## இஸ்லாம் I

**அறிவுறுத்தல்கள் :**

* எல்லா வினாக்களுக்கும் விடை எழுதுக.
* 1 தொடக்கம் 40 வரையுள்ள வினாக்கள் ஒவ்வொன்றிலும் (1), (2), (3), (4) என இலக்கமிடப்பட்ட விடைகளில் சரியான அல்லது மிகப் பொருத்தமான விடையைத் தெரிவுசெய்க.
* உமக்கு வழங்கப்பட்டுள்ள விடைத்தாளில் ஒவ்வொரு வினாவுக்கும் உரிய வட்டங்களில் உமது விடையின் இலக்கத்தை ஒத்த வட்டத்தினுள்ளே புள்ளடியை (X) இடுக.
* அவ்விடைத்தாளின் மறுபக்கத்தில் தரப்பட்டுள்ள மற்றைய அறிவுறுத்தல்களையும் கவனமாக வாசித்து, அவற்றைப் பின்பற்றுக.

**1.** 'மு'ஜிஸாத்' எனும் பதத்தின் கருத்து
(1) உளத்தூய்மை (2) அற்புதம் (3) அறிவியல் சார்ந்தது (4) அசரீரி

**2.** முதன்முதலாக நபி(ஸல்) அவர்களுக்கு இறக்கி வைக்கப்பட்ட ஐந்து வசனங்களை உள்ளடக்கிய சூறாவின் பெயர்
(1) சூறத்துல் அலக் (2) சூறத்துல் பலக்
(3) சூறத்துல் முஸம்மில் (4) சூறத்துல் பாத்திஹா

**3.** 'ஜாமிஉல் குர்ஆன்' என அழைக்கப்படும் கலீபா
(1) அபூபக்ர் (றழி) (2) உமர் (றழி) (3) உஸ்மான் (றழி) (4) அலி (றழி)

**4.** இஸ்லாமிய மூலாதாரங்களுள் ஒன்றான 'இஜ்மாஉ' எனும் பதம் குறிப்பது
(1) இறுதியான முடிவு (2) ஒப்பு நோக்குதல்
(3) தீர்ப்பு வழங்குதல் (4) ஏகோபித்த முடிவு

**5.** அர்கானுல் கியாஸில் **உள்ளடக்கப்படாதது**
(1) அல் அஸ்ல் (2) அல் வஸ்ல் (3) அல் பரஉ (4) அல் இல்லத்

**6.** இரும்பைக் கையாளும் தொழில்நுட்ப அறிவு கொடுக்கப்பட்டதாக அல்குர்ஆன் குறிப்பிடும் நபி
(1) நூஹ் (அலை) (2) இப்றாஹீம் (அலை)
(3) ஸுலைமான் (அலை) (4) தாவூத் (அலை)

**7.** பின்வரும் அறிஞர்களில் அறபு இலக்கண வல்லுனர் எனப் புகழ் பெற்றவர் யார்?
(1) அல் முதன்னி (2) இமாம் தபரீ
(3) இமாம் இப்னு கல்தூன் (4) இமாம் ஷீபவைஹி

**8.** அதிகமான மக்களால் அலட்சியப்படுத்தப்படுவதாக நபி(ஸல்) அவர்களால் அடையாளங் காணப்பட்ட இரண்டு அருட்கொடைகள்
(1) ஆரோக்கியம், ஓய்வு (2) ஓய்வு, செல்வம்
(3) செல்வம், ஆரோக்கியம் (4) அறிவு, செல்வம்

9. "நபிமார்கள் பாவங்கள், பிழைகள் செய்வதிலிருந்து பாதுகாப்பு பெற்றுள்ளனர்." என்ற பண்பைக் குறிக்கும் அறபுப் பதம் எது?
(1) பலாகத் (2) இஸ்மத் (3) பதானத் (4) ம..ரிபத்

10. 'இறைவன் இல்லை' என இறைவனை நிராகரிக்கும் நாத்திக சிந்தனையைக் குறிக்கும் சொல்
(1) இல்ஹாத் (2) நிபாக் (3) குப்ர் (4) ஷிர்க்

11. நபி (ஸல்) அவர்களது கடிதத்தை எகிப்திய மன்னனுக்கு எடுத்து சென்ற ஸஹாபி
(1) ஹாதிப் இப்னு அபூ பல்தஆ (றழி) (2) அப்துல்லாஹ் இப்னு ஹுஸைமா (றழி)
(3) திஹ்யதுல் கல்பி (றழி) (4) அம்ர் இப்னு உமையா (றழி)

12. உமையா கலீபா உமர்பின் அப்துல் அஸீஸ் அவர்களின் உத்தரவின்பேரில் ஹதீஸ்களை ஒன்று திரட்டி நூலுருப்படுத்தியவர்
(1) இமாம் புகாரி (ரஹ்) (2) இமாம் திர்மிதி (ரஹ்)
(3) இமாம் ஷிஹாபுத்தீன் ஸுஹ்ரி (ரஹ்) (4) இமாம் முஸ்லிம் (ரஹ்)

13. நபி (ஸல்) அவர்களது காலத்து கவிஞர்களுள் உள்ளடக்கப்படாத கவிஞர் யார்?
(1) ஹஸ்ஸான் பின் ஸாபித் (2) ஹுதைபதுல் யமானி
(3) க..ப் இப்னு மாலிக் (4) அப்துல்லாஹ் இப்னு றவாஹா

14. நபி (ஸல்) அவர்களுடைய மறைவின் பின்னர் அபூபக்ர் (றழி) அவர்கள் கலீபாவாக தெரிவு செய்யப்பட்ட இடம்
(1) மஸ்ஜிதுந் நபவி (2) பி..ருருமா
(3) ஸகீபது பனீ ஸாஇதா (4) ஸகீபது பனீ நழ்ர்

15. பின்வருவனவற்றுள் அலி (றழி) அவர்களுக்குரிய சிறப்புப்பெயர் யாது?
(1) ஸைபுல்லாஹ் (2) அஸதுல்லாஹ் (3) கலீலுல்லாஹ் (4) கலீமுல்லாஹ்

16. அலி (றழி) அவர்களது ஆட்சிக்காலப் பகுதியில் அல்குர்ஆன் எழுத்துக்களுக்கு உயிர்க்குறி இட்டவர்
(1) அபுல் அஸ்வத் அத்துஅலி (2) ஸைத் இப்னு ஸாபித்
(3) காலித் பின் வலீத் (4) முஸ்அப் இப்னு உமைர்

17. பின்வருவனவற்றுள் விவாகரத்தோடு தொடர்புபடாத சொல்
(1) லிஆன் (2) குல்உ (3) ஈஜாப் (4) பஸ்கு

18. இமாமுல் மதீனா என அழைக்கப்படும் அறிஞர்
(1) இமாம் அபூஹனீபா (ரஹ்) (2) இமாம் மாலிக் (ரஹ்)
(3) இமாம் ஷாபிஈ (ரஹ்) (4) இமாம் அஹ்மத் இப்னு ஹன்பல் (ரஹ்)

19. பின்வருவனவற்றுள் மாஉ த்தஹூர் எனும் மிகச் சுத்தமான நீராகக் கருதப்படுபவை யாவை?
(1) மழை நீர், கடல் நீர் (2) இளநீர், ஆற்று நீர்
(3) கடல் நீர், தேனீர் (4) ஆற்று நீர், பன்னீர்

20. பின்வரும் அட்டவணையில் "அ" நிரலில் அறிஞர்களின் பெயர்களும் "ஆ" நிரலில் அவர்களால் எழுதப்பட்ட நூல்களும் தரப்பட்டுள்ளன.

| அ | ஆ |
|---|---|
| (1) இமாம் அபூஹனீபா (ரஹ்) | A - அல்-உம்மு |
| (2) இமாம் மாலிக் (ரஹ்) | B - பிக்ஹுல் அக்பர் |
| (3) இமாம் ஷாபிஈ (ரஹ்) | C - முஸ்னத் |
| (4) இமாம் அஹ்மத் இப்னு ஹன்பல் (ரஹ்) | D - முஅத்தா |

மேலே "அ" நிரலுக்குப் பொருத்தமான விதத்தில் "ஆ" நிரல் ஒழுங்குபடுத்தப்படும் போது சரியாக அமையும் தெரிவு யாது?
(1) ABCD (2) BCDA (3) BDAC (4) DCBA

21. திருமணம் முடிப்பதற்கு நிரந்தரமாகத் தடை செய்யப்பட்டவர்களுள் ஒருவர்
(1) தந்தையின் சகோதரி (2) இத்தாவிலிருக்கும் பெண்
(3) மனைவியின் சகோதரி (4) மாமி மகள்

22. ஒரு ரக்அத்தில் இரண்டு ருகூஉகள் செய்யப்படும் தொழுகை
(1) மழை வேண்டித் தொழும் தொழுகை (2) கிரகணத் தொழுகை
(3) பெருநாள் தொழுகை (4) இரவுத் தொழுகை

23. பின்வரும் அட்டவணையில் "X" நிரலில் இஸ்லாமிய துணை மூலாதாரங்கள் சிலவற்றின் பெயரும் "Y" நிரலில் அவற்றின் கருத்துக்களும் தரப்பட்டுள்ளன.

| X | Y |
|---|---|
| (1) கௌலுஸ்ஸஹாபி | A - சமூக நலன் பேணல் |
| (2) அல் உர்பு | B - நபித் தோழர்களின் கூற்று |
| (3) அல் கியாஸ் | C - வழக்காறு |
| (4) மஸ்லஹா முர்ஸலா | D - ஒப்பு நோக்குதல் |

மேலே "X" நிரலுக்குப் பொருத்தமான விதத்தில் "Y" நிரல் ஒழுங்குபடுத்தப்படும் போது சரியாக அமையும் தெரிவு யாது?
(1) ADBC (2) BCDA (3) CADB (4) DCAB

24. மறுமையோடு தொடர்புபடாத சொல்
(1) ஸிறாத் (2) மீஸான் (3) ஷபாஅத் (4) லவ்ஹுல் மஹ்பூள்

25. தொழுகையில் ஆரம்ப தக்பீர் கட்டியவுடன் பின்வருவனவற்றுள் எது ஓதுவது சுன்னத்தாக்கப்பட்டுள்ளது?
(1) தக்பீரதுல் இஹ்றாம் (2) குனூத்
(3) துஆஉல் இஸ்திப்தாஹ் (4) சூறத்துல் பாத்திஹா

26. ஒருவர் தனது மனைவிக்கு சொத்தில் பங்கு கிடைக்கக்கூடாது என்ற நோக்கில் தனது மரணத்தறுவாயில் அவளைத் தலாக் சொல்வது
(1) வாஜிபான தலாக் (2) சுன்னத்தான தலாக்
(3) ஹறாமான தலாக் (4) முபாஹான தலாக்

27. ஒருவர் தொடர்ந்து யாசகம் கேட்டு வந்தால் மறுமையில் அவர் எவ்வாறு வருவதாக நபி (ஸல்) அவர்கள் குறிப்பிட்டார்கள்
(1) ஒரு பக்கம் சாய்ந்த நிலையிலே (2) முதுகு கூனிய நிலையிலே
(3) கண் பார்வையற்ற நிலையிலே (4) முகத்தில் சதை இல்லாத நிலையிலே

28. நபி ஸுலைமான் (அலை) அவர்களோடு சம்பந்தப்பட்ட சொற்தொகுதி
(1) ஹுத்ஹுத், பல்கீஸ், அபீஸீனியா (2) ஹுத்ஹுத், பல்கீஸ், ஸபஃ.
(3) யத்ரிப், ஸபஃ, பல்கீஸ் (4) ஹுத்ஹுத், ஸபஃ, ஸுலைஹா

29. நபி (ஸல்) அவர்களுக்கு முதன் முதலில் வஹி அறிவிக்கப்பட்டதன் பின்னர் ஹதீஜா (றழி) அவர்கள் நபியவர்களை யாரிடம் அழைத்துச் சென்றார்கள்?
(1) அபூபக்ர் (றழி) (2) உம்முஹானி
(3) வறகத் இப்னு நவ்பல் (4) அபூஸலமா

30. நபி (ஸல்) அவர்கள் நபியாக தேர்ந்தெடுக்கப்பட்டபோது நபியவர்களை ஆதரித்து சூழ்ந்திருந்த இளைஞர் அணியில் உள்ளவர்
(1) அபூபக்ர் (றழி) (2) உமர் (றழி) (3) உஸ்மான் (றழி) (4) அர்கம் (றழி)

31. தலாக் சொல்லப்பட்ட பெண்களுடைய இத்தாக் காலம்
(1) மூன்று சுத்தங்கள் (2) நான்கு மாதங்களும் பத்து நாட்களும்
(3) 40 நாட்கள் (4) ஒரு மாதம்

32. வியாபாரத்தில் ஈடுபடும்போது வியாபாரப் பொருளுக்கு இருக்க வேண்டிய விடயம் அல்லாதது
(1) விற்பவருக்கு சொந்தமானதாக இருத்தல்
(2) விற்கும் இடத்திலேயே காணப்படல்
(3) வாங்குபவருக்கு ஒப்படைக்கும் தகுதியோடு இருத்தல்
(4) இஸ்லாமிய அடிப்படையில் சுத்தமானதாகவும், பயனுள்ளதாகவும் இருத்தல்

**33.** நபி (ஸல்) அவர்களது வாழ்க்கை வரலாற்றைத் திரட்டி முஹம்மத் பின் இஸ்ஹாக் என்பவரால் ஹி. 151 இல் எழுதப்பட்ட முதல் ஸீறா நூல்
(1) சீறாப் புராணம்　(2) அர்ரஹீக் அல்-மக்தூம்
(3) ஸீறத் ரஸூலில்லாஹ்　(4) ஸீறத் இப்னு ஹிஷாம்

**34.** ஸகாத் விதியாகும் பொருட்கள் அடங்கியுள்ள தொகுதி யாது?
(1) தங்கம், வெள்ளி, வாகனம்　(2) நெல், வாகனம், பணம்
(3) ஆடு, பேரீச்சம் பழம், தங்கம்　(4) பணம், தங்கம், வாகனம்

**35.** 'முஸ்லிம் நேசன்' எனும் பத்திரிகையை ஆரம்பித்து சமயச் சூழலில் கல்வியை கற்பதன் அவசியத்தை வலியுறுத்தி எழுதிய அறிஞர்
(1) சித்திலெப்பை　(2) ரீ. பீ. ஜாயா　(3) அப்துல் அஸீஸ்　(4) ஒராபி பாஷா

**36.** பின்வரும் பதங்களைக் கருதுக.

| | | |
|---|---|---|
| (A) அர்ரிபா | (D) அல் முழாரபா | (G) அல் இஜாரா |
| (B) அல் முராபஹா | (E) மஹ்ர் | (H) அல் கிராள் |
| (C) அல் பிஃயா | (F) அல் முஷாரகா | (I) அத்தல்கியா |

மேற்படி அட்டவணையில் இஸ்லாத்தில் அனுமதிக்கப்பட்ட வியாபார முறைகளைக் குறிக்கும் சொற் தொகுதி
(1) ABCD　(2) BCEF　(3) BDFG　(4) BDGI

**37.** முஜ்தஹித் என்பவரிடம் காணப்பட வேண்டிய முக்கியமான பண்புகளில் ஒன்று
(1) அல்-குர்ஆன், அஸ்ஸுன்னாவில் ஆழமான அறிவுடையவராக இருத்தல்
(2) பிற்பட்ட காலத்தவராக இருத்தல்
(3) நபித் தோழராக இருத்தல்
(4) இஸ்லாமிய நாட்டை பூர்வீகமாகக் கொண்டிருத்தல்

**38.** இஸ்லாம் கூறும் நற்பண்புகளில் ஒன்று அல்குர்ஆனில் எழுபதுக்கும் மேற்பட்ட இடங்களில் பிரஸ்தாபிக்கப்பட்டுள்ளது. அப் பண்பு யாது?
(1) பணிவு　(2) துணிவு　(3) மன்னிப்பு　(4) பொறுமை

**39.** சுன்னத்தான நோன்பு நோற்பதற்குப் பொருத்தமான நாட்களை மாத்திரம் கொண்ட தெரிவு யாது?
(1) திங்கள், வியாழன்　(2) வியாழன், வெள்ளி
(3) ஞாயிறு, திங்கள்　(4) புதன், வியாழன்

**40.** உடற் பலமும், பொருளாதார பலமும் உள்ள ஒரு ஆண், பாவத்தில் விழுந்து விடுவார் என அஞ்சினால் அவர் திருமணம் செய்வது
(1) மக்ரூஹ் ஆகும்.　(2) ஸுன்னத் ஆகும்.
(3) வாஜிப் ஆகும்.　(4) முபாஹ் ஆகும்.

**

ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்

අ.පො.ස (සා.පෙළ) විභාගය / க.பொ.த. (சாதாரண தர)ப் பரீட்சை - 2022 (2023)

| විෂය අංකය<br>பாட இலக்கம் | 16 | විෂයය<br>பாடம் | இஸ்லாம் |
|---|---|---|---|

ලකුණු දීමේ පටිපාටිය / புள்ளி வழங்கும் திட்டம்
I පත්‍රය / பத்திரம் I

| ප්‍රශ්න අංකය<br>வினா இல. | පිළිතුරු අංකය<br>விடை இல. | ප්‍රශ්න අංකය<br>வினா இல. | පිළිතුරු අංකය<br>விடை இல. | ප්‍රශ්න අංකය<br>வினா இல. | පිළිතුරු අංකය<br>விடை இல. | ප්‍රශ්න අංකය<br>வினா இல. | පිළිතුරු අංකය<br>விடை இல. |
|---|---|---|---|---|---|---|---|
| 01. | 2 | 11. | 1 | 21. | 1 | 31. | 1 |
| 02. | 1 | 12. | 3 | 22. | 2 | 32. | 2 |
| 03. | 3 | 13. | 2 | 23. | 2 | 33. | 3 |
| 04. | 4 | 14. | 3 | 24. | 4 | 34. | 3 |
| 05. | 2 | 15. | 2 | 25. | 3 | 35. | 1 |
| 06. | 4 | 16. | 1 | 26. | 3 | 36. | 3 |
| 07. | 4 | 17. | 3 | 27. | 4 | 37. | 1 |
| 08. | 1 | 18. | 2 | 28. | 2 | 38. | 4 |
| 09. | 2 | 19. | 1 | 29. | 3 | 39. | 1 |
| 10. | 1 | 20. | 3 | 30. | 4 | 40. | 3 |

- විශේෂ උපදෙස් / விசேட அறிவுறுத்தல் :

එක් පිළිතුරකට / ஒரு சரியான விடைக்கு 01 ලකුණු බැගින් / புள்ளி வீதம்

මුළු ලකුණු / மொத்தப் புள்ளிகள் 1 x 40 = 40

# இஸ்லாம் II

1. சுருக்கமான விடை எழுதுக.

(i) ஸபூர் வேதம் அருளப்பட்ட நபி யார்?

தாவூத் (அலை) **(02 புள்ளிகள்)**

(ii) 'தஸ்கியா' என்பதன் பொருள் யாது?

(உள்ளத்தை) பரிசுத்தப்படுத்தல் / சீர்படுத்தல் **(02 புள்ளிகள்)**

(iii) ஸிஹாஹுஸ்ஸித்தா தொகுப்பாளர்களில் நால்வரைக் குறிப்பிடுக.

* இமாம் புஹாரி (றஹ்)
* இமாம் முஸ்லிம் (றஹ்)
* இமாம் அபூதாவுத் (றஹ்)
* இமாம் திர்மிதி (றஹ்)
* இமாம் நஸாஈ (றஹ்)
* இமாம் இப்னு மாஜா (றஹ்)

**(இவர்களுள் நால்வர் குறிப்பிடப்பட்டிருப்பின் 02 புள்ளிகள்)**

(iv) முன்னைய கலீபாவால் கிலாபத்திற்கென பிரகடனம் செய்யப்பட்ட ஸஹாபியின் பெயர் யாது?

உமர் (ரழி) **(02 புள்ளிகள்)**

(v) ஒழுக்கத்தை வலியுறுத்தும் ஹதீஸ் ஒன்றைத் தருக.

* "நபி (ஸல்) அவர்களிடம் ஈமானில் பூரணத்துவம் மிக்க மனிதர் யார்?" என வினவப்பட்டது. அதற்கு, "அவர்களுள் நற்பண்புடையவரே" எனப் பதிலளித்தார்கள். (தபரானி)
* "அல்லாஹ்வின் அடியார்களில் யார் அல்லாஹ்வுக்கு மிகவும் நெருக்கமானவர் என நபி (ஸல்) அவர்களிடம் வினவப்பட்ட போது, சிறந்த ஒழுக்கமுடையோரே" எனப் பதிலளித்தார்கள். (இப்னு ஹிப்பான்)
* "மனிதர்களுக்கு வழங்கப்பட்டவைகளுள் மிகவும் சிறந்தது எது எனக் கேட்கப்பட்டபோது, நபி (ஸல்) அவர்கள் "சிறந்த ஒழுக்கப் பண்புகள்" எனப் பதிலளித்தார்கள்" (திர்மிதி)

**(இவை போன்ற ஹதீஸ்களுள் ஒன்று குறிப்பிடப்பட்டிருப்பின் 02 புள்ளிகள்)**

(vi) இஸ்லாத்தில் திருமணத்தின் நோக்கங்கள் இரண்டினைக் குறிப்பிடுக.

* ஸாலிஹான சந்ததியை உருவாக்கல்.
* உடல், உள அமைதியை ஏற்படுத்தல்.
* சிறந்த சமூகக்கட்டமைப்பை உருவாக்கல்.

**(இவை போன்ற இரண்டு கருத்துக்கள் குறிப்பிடப்பட்டிருப்பின் 02 புள்ளிகள்)**

(vii) வியாபாரத்தின் போது தவிர்த்துக் கொள்ள வேண்டிய விடயங்களில் இரண்டைத் தருக.

* பொய் சத்தியம்
* அளவை நிறுவை மோசடி
* பதுக்கல்
* நியாயமற்ற விலை விதிப்பு
* கலப்படம்
* பொய்
* ஏமாற்று
* பொதுச்சட்டங்களை மீறுதல்

**(இவைகளுள் இரண்டு குறிப்பிடப்பட்டிருப்பின் 02 புள்ளிகள்)**

(viii) இஸ்லாம் கூறும் நற்பண்புகளில் இரண்டினைக் குறிப்பிடுக.

* அன்பு
* தியாகம்
* ஈகை
* நாணயம்
* பொறுமை
* துணிவு
* பணிவு
* மன்னிப்பு
* புலன்களைப் பேணல்

(இவைகளுள் இரண்டு குறிப்பிடப்பட்டிருப்பின் 02 புள்ளிகள்)

(ix) தயம்மும் செய்யும் உறுப்புக்கள் யாவை?

* முகம்
* இரு கைகள் (02 புள்ளிகள்)

(X) மரணித்தவரது சொத்திலிருந்து முதலில் நிறைவேற்றப்பட வேண்டிய விடயம் எது?

* மரணித்தவரது கடன் **(02 புள்ளிகள்)**

**(மொத்தம் 2 x 10 = 20 புள்ளிகள்)**

2. (i) குடும்ப உறவின் மூலம் திருமணம் முடிக்கத் தடை செய்யப்பட்டவர்களில் (மஹ்ரம்கள்) இருவரைக் குறிப்பிடுக.

* தாய், தாயின் தாய் என மேல் செல்லும் உறவு முறை
* பிள்ளை, பிள்ளையின் பிள்ளை என கீழ் செல்லும் உறவு முறை
* சொந்த தாய் தந்தையின் பிள்ளைகள், பிள்ளைகளின் பிள்ளைகள்
* சொந்த பாட்டன் பாட்டியின் பிள்ளைகள். (அவர்களது பிள்ளைகள் அஜ்னபிகளாகும்)

**(இவற்றுள் இருவர் குறிப்பிடப்பட்டிருப்பின் 2 புள்ளிகள்)**

(ii) "ஒவ்வொரு மனிதனும் சட்டத்தின் முன் சமனாகும்" என்பதை வலியுறுத்தும் நபி (ஸல்) அவர்களின் போதனைகளில் ஒன்றைத் தருக.

* "அல்லாஹ்வின் மீது ஆணையாக முஹம்மதின் மகள் பாத்திமா களவெடுத்தாலும் கையை வெட்டியிருப்பேன்". (அபூதாவுத்)

**(இதுபோன்ற ஒரு ஹதீஸ் குறிப்பிடப்பட்டிருப்பின் 03 புள்ளிகள்)**

(iii) இலங்கை மக்கள் என்ற வகையில் நாம் கடைப்பிடிக்க வேண்டிய வழிகாட்டல்கள் ஐந்தைக் குறிப்பிட்டு விளக்குக.

* தேசத்தின் மீது அன்பு வைத்தல்.
* தேசத்திற்கு விசுவாசமாக நடத்தல்.
* தேச மக்களின் உணர்வுகளுக்கு மதிப்பளித்தல்.
* தேச ஐக்கியத்தைப் பாதுகாத்தல்.
* தேசம் எதிர்கொள்ளும் சவால்களுக்கு முகங்கொடுத்தல்.
* தேசத்தின் சட்டங்களுக்கு மதிப்பளித்தல்.
* சமூக விரோத செயல்களை ஒழிக்க ஒத்துழைத்தல்.
* பிற மதத்தவர்களுடன் இஸ்லாமிய வரையறைகளைப் பேணிப் பழகுதல்.
* சுதேச மொழிகளைக் கற்றல்.
* தேசத்திற்காக பிரார்த்தித்தல்.

**(இவை போன்ற ஐந்து கருத்துக்கள் குறிப்பிடப்பட்டிருப்பின் 5 புள்ளிகள்)**

**மொத்தம் $2 + 3 + 5 = 10$ புள்ளிகள்**

3. (i) தயம்மும் செய்வதற்கான இரண்டு சந்தர்ப்பங்களைத் தருக.

* நோய் காரணமாக நீரை பயன்படுத்த முடியாமல் போதல்
* குடிப்பதற்கு மட்டும் நீர் உள்ள போது
* நீர் கிடைக்காத போது
* கடுமையான குளிரின் போது
* வுழுவின் உறுப்புக்களுக்கு கட்டுப்போடப்பட்ட நிலையில் (ஜபீரத்)

**(இவற்றுள் இரண்டு குறிப்பிடப்பட்டிருப்பின் 2 புள்ளிகள்)**

(ii) நஜீஸின் மூன்று வகைகளையும் குறிப்பிடுக.

* கடுமையான நஜீஸ்
* சாதாரண நஜீஸ்
* இலகுவான நஜீஸ்

**(3 புள்ளிகள்)**

(iii) அல்மாஉ_த்தஹூர் உதாரணங்களுடன் வரைவிலக்கணப்படுத்தி, அதன் பயன்பாடுகளில் மூன்றைக் குறிப்பிடுக.

* **அல் மாஉ_த்தஹூர் :** மிகப் பரிசுத்தமான நீர்
* தன்னில் சுத்தமானது பிற ஒன்றையும் சுத்தப்படுத்தக்கூடியது.

**உ_தாரணம்** :படிவு வீழ்ச்சி மூலம் பெறப்படும் நீர் (மழை, பனி, ஆலங்கட்டி , ஆற்று நீர், கிணற்று நீர், கடல் நீர், குழாய் நீர், ஊற்று நீர்....

பயன்பாடுகள்:

* வுழு செய்ய
* குளிக்க
* ஜனாஸா குளிப்பாட்ட
* நஜீஸ்களை சுத்தம் செய்ய

**(வரைவிலக்கணம் உதாரணங்களுடன் குறிப்பிடப்பட்டிருப்பின் 2 புள்ளிகளும் மாஉன் தஹூருக்குரிய பயன்பாடுகள் மாத்திரம் குறிப்பிடப்பட்டிருப்பின் 3 புள்ளிகளுமாக மொத்தம் 5 புள்ளிகள்)**

4. (i) "வஸதிய்யா" என்பதன் பொருளை வரைவிலக்கணத்தோடு எழுதுக.

* வஸதிய்யா என்பது நடுநிலைத்தன்மை என்பதைக் குறிக்கும்.
* இரண்டு தீவிரங்களுக்கு இடையில் நடுநிலைப் போக்கை ஏற்பது வஸதிய்யா எனப்படும்.

**(பொருளை மாத்திரம் குறிப்பிட்டிருப்பின் ஒரு புள்ளியும் வரைவிலக்கனத்தோடு எழுதியிருப்பின் 2 புள்ளிகளும்)**

(ii) பொருளீட்டல் ஓர் 'இபாதத்தாக' ஆக வேண்டுமெனில் கடைப்பிடிக்க வேண்டிய இஸ்லாமிய வழிகாட்டல்களில் மூன்றைத் தருக.

* தூய எண்ணம்.
* ஷரீஆவின் அனுமதி.
* ஷரீஆவின் வரையறைகளை மீறாதிருத்துல்.
* அடிப்படை வணக்க வழிபாடுகளுக்கு தடையில்லாமல் இருத்தல்.
* நேர்த்தியாகவும், ஒழுங்காகவும் செய்தல்.

**(இவற்றுள் மூன்று விடயங்கள் குறிப்பிடப்பட்டிருப்பின் 3 புள்ளிகள்)**

(iii) உள ஆரோக்கியம் பற்றி அல்குர்ஆன், அல்ஹதீஸ் என்பவற்றின் ஆதாரங்களுடன் விளக்குக.

* உடல் ஆரோக்கியத்தை விட உள ஆரோக்கியம் முன்னுரிமை படுத்தப்பட வேண்டியதாகும்.
    * "யார் (உள்ளமாகிய) அதனை தூய்மைப்படுத்துகிறாரோ அவர் வெற்றியடைந்துவிட்டார்" (99:9)
    * "அல்லாஹ் உங்களது உடல்களையோ, தோற்றங்களையோ பார்ப்பதில்லை. மாறாக, உங்கள் உள்ளங்களையும், செயல்களையுமே பார்க்கின்றான்" (புஹாரி, முஸ்லிம்)
* ஆரோக்கியமான உள்ளத்தில் இருந்தே நற்செயல்களும், நல்ல சிந்தனைகளும் உருவாக முடியும்.
    * "உடலிலே ஒரு தசைத்துண்டு உண்டு. அது சீரடைந்துவிட்டால் முழு உடலும் சீரடைந்துவிடும், அது சீர்கெட்டுவிட்டால் முழு உடலும் சீர்கெட்டுவிடும். அதுதான் உள்ளம்" (புஹாரி)
* நோயுற்ற உள்ளத்தில் இருந்து பாவங்களே வெளியாகும்.
* உறுப்புக்களின் பாவத்தை மனிதன் உடனே உணர்ந்து கொள்வான். உள்ளத்தின் பாவத்தை உணரும் வாய்ப்பு குறைவு.
* உடல் உறுப்புக்களின் பாவங்களை விட உள்ளத்தின் பாவங்கள் கடுமையானவை.

**(ஒரு அல்குர்ஆன் அல்லது அல்ஹதீஸ் ஆதாரத்திற்கு 2 புள்ளிகளும் மூன்று விளக்கங்களுக்கு 3 புள்ளிகளுமாக மொத்தம் 5 புள்ளிகள்)**

5. (i) ஸக்காத்தை கூட்டாக நிறைவேற்றுவதால் ஏற்படும் பயன்களில் நான்கை எழுதுக.

* ஸக்காத்திலிருந்து செல்வந்தர் எவரும் நழுவிவிடாதிருக்க வழி பிறக்கிறது.
* ஏழைகளின் சுய கௌரவம் பாதுகாக்கப்படல்
* வறுமை ஒழிப்பு திட்டத்தை திட்டமிட்டு மேற்கொள்ள முடியுமாக இருத்தல்.
* ஸக்காத் பெறத்தகுதியான அனைவரும் பயனடைதல்
* பொருத்தமான சமூகப்பணிகளில் ஸக்காத் நிதியை ஈடுபடுத்தல்

**(இவை போன்ற 4 விடயங்கள் குறிப்பிடப்பட்டிருப்பின் 2 புள்ளிகள்)**

(ii) ஸக்காத் பெற தகுதியானவர்களில் மூன்று பிரிவினரைக் குறிப்பிட்டு சுருக்கமாக விளக்குக.

* பகீர் : எவ்வித வருமானமும் அற்றவர்.
* மிஸ்கீன் : போதிய வருமானம் அற்றவர்.
* ஆமில் : ஸக்காத் சேகரித்து, விநியோகிக்கும் பணியில் ஈடுபடுபவர்.
* முஅல்லபதுல் குலூப் : இஸ்லாத்தின் பக்கம் கவரப்பட்டவர்.
* ரிகாப் : உரிமை சீட்டு எழுதப்பட்ட அடிமை.
* காரிமூன் : நியாயமான காரணத்திற்கு கடன் பெற்று அதனை திருப்பிச் செலுத்த முடியாதோர்.
* பீ ஸபீலில்லாஹ் : அல்லாஹ்வின் பாதையில் இருந்து இஸ்லாத்தை பாதுகாப்போர்.
* இப்னுஸ்ஸபீல் : அனுமதிக்கப்பட்ட பயணம் சென்று நிறைவு செய்ய வழி அற்றவர்.

**(இவற்றுள் மூன்று பிரிவினர் குறிப்பிடப்பட்டு சுருக்கமாக விளக்கியிருப்பின் 03 புள்ளிகள்)**

(iii) 'தவ்பா' என்றால் என்ன என்பதைக் குறிப்பிட்டு, அது ஏற்றுக் கொள்ளப்படுவதற்கான நிபந்தனைகளைத் தருக.

* **மொழி ரீதியாக :** மீளுதல் , திரும்புதல் என்பது கருத்தாகும்.
* **பரிபாஷையில் :** ஒரு மனிதன் இரகசியமாக அல்லது பரகசியமாக இறைவன் வெறுக்கும் செயல்களை செய்வதிலிருந்து அவன் விரும்பக்கூடிய செயல்களின் பால் திரும்பி விடுதல். அல்லது ஒரு மனிதன் வாழ்ந்து வரும் வாழ்க்கையில் இருந்து புதிய ஒரு வாழ்க்கை முறைக்கு மீள்வதை குறிக்கும்.
* **தவ்பாவிற்குரிய நிபந்தனைகள்**

01. இறைவனுக்காக என்ற தூய எண்ணத்தோடு தவ்பா செய்தல்.
02. செய்த பாவத்தை விட்டு விடுதல்.
03. செய்த பாவத்தை எண்ணி மனம் வருந்துதல்.
04. செய்த பாவத்தை திரும்பவும் செய்வதில்லை என உருதி கொள்ளல்.
05. அடியார்களோடு தொடர்பான பாவமாக இருந்தால் அவரிடம் மன்னிப்பு கேட்டல்.

**(தவ்பா என்பதற்கான விளக்கத்திற்கு 1 புள்ளியும் அதற்கான நிபந்தனைகள் நான்கு குறிப்பிடப்பட்டிருப்பின் 4 புள்ளிகளுமாக மொத்தம் 5 புள்ளிகள்)**

6. (i) கணவன் தன் மீது திருப்தி கொண்ட நிலையில் மரணமடையும் பெண்ணுக்கு மறுமையில் கிடைப்பதாக நபி (ஸல்) குறிப்பிட்ட பரிசு என்ன?

* சுவர்க்கம் **(02 புள்ளிகள்)**

(ii) முன்மாதிரி முஸ்லிம் குடும்பத்தின் பெற்றோரது கடமைகள் மூன்றைக் குறிப்பிடுக.

* அழகிய பொருத்தமான பெயரை சூட்டல்
* ஏழும் நாள் அகீகா கொடுத்தல்
* பிள்ளைகளுக்காக துஆ செய்தல்
* பிள்ளைகளுடன் அன்புடன் நடந்துகொள்ளல்.
* பிள்ளைகளுக்காக செலவு செய்தல்.
* கல்வியைப் பெற்றுக்கொள்ள வாய்ப்பளித்தல்.
* மார்க்கக் கல்வியை பெற ஏற்பாடு செய்தல்
* தொடர்பூடகங்கை முறையாக பயன்படுத்த வழிகாட்டல்.

**(இவை போன்ற மூன்று விடயங்கள் குறிப்பிடப்பட்டிருப்பின் 3 புள்ளிகள்)**

(iii) தொடர்பூடகங்கள் பின்பற்ற வேண்டிய பண்புகளில் ஐந்தைக் குறிப்பிட்டுச் சுருக்கமாக விளக்குக.

**1. ஆதாரபூர்வமான செய்திகளை வெளியிடுதல்**

* கிடைக்கும் தகவல்கள் அனைத்தையும் நிச்சயப்படுத்திக் கொள்ளாதவரை வெளியிடலாகாது என்பது இஸ்லாத்தின் கட்டளையாகும்.
* "நம்பிக்கையாளர்களே! யாதொரு விஷமி உங்களிடம் யாதொரு செய்தியைக் கொண்டு வந்தாலும் (அதன் உண்மையை அறியும்பெருட்டு அதனைத்) தீர விசாரித்து தெளிவு பெற்றுக் கொள்ளுங்கள். இல்லையெனில் அவனுடைய சொல்லை நம்பி அறியாமையின் காரணமாக ஒரு சமூகத்தைப் பாதிக்கும் முடிவுகளுக்கு வந்துவிடக்கூடும். பின்னர், நீங்கள் செய்தவைகளைப் பற்றி நீங்களே துக்கித்து கவலைப்படவும் நேர்ந்துவிடும்" (அல்குர்ஆன் 49: 6)

"ஒருவன் தனது காதில் விழும் தகவல்கள் அனைத்தையும் (ஊர்ஜிதப்படுத்தாமல்) எடுத்துக் கூறுவது அவன் சொல்லும் பெரிய பொய்யாகும்" (முஸ்லிம்)

**2. நம்பகத் தன்மை கொண்டவை**

* ஊகம், கற்பனை, பிரமை, இருட்டடிப்பு, பொய்க் கலப்பு போன்றவற்றைத் தவிர்த்து நம்பகத் தன்மை கொண்ட செய்திகளை மாத்திரம் வெளியிட வேண்டும்.
* "...நீங்கள் உண்மை சொல்பவராக இருந்தால் ஆதாரத்துடன் இதனை நீங்கள் எனக்கு அறிவியுங்கள்" (அல்குர்ஆன் 6:143) என்று அல்குர்ஆன் கூறுகின்றது.

**3. நடுநிலை தவறாது செயற்படக்கூடியவை**

* ஒருபோதும் சமூக சார்பெண்ணங்களுக்கோ, பக்கசார்புகளுக்கோ பலியாகிவிடக் கூடாது. செய்திகளை மாற்றியும், திரித்தும், மிகைப்படுத்தியும் குறை மதிப்பீடு செய்தும் வெளியிடுவது விழுமியத்திற்கு அப்பாற்பட்டதாகும்.

"விசுவாசிகளே! நீங்கள் நீதத்தின் மீதே நிலைத்திருங்கள். "(நீங்கள் சாட்சி கூறினால் அது) உங்களுக்கோ அல்லது உங்கள் பெற்றோருக்கோ அல்லது நெருங்கிய உறவினருக்கோ பாதகமாக இருந்தபோதிலும் அல்லாஹ்வுக்காக (உண்மையையே) சாட்சி கூறுபவர்களாக இருங்கள்... (அல்குர்ஆன் 4 :135)

**4. பொதுநலன் பேணக்கூடியவை**

* ஊடக சுதந்திரத்தை இஸ்லாம் வழங்கினாலும், இந்த உரிமையைப் பயன்படுத்தும்போது தனிமனித, சமூக நலன்களைப் பாதிக்காத வகையில் அது அமைதல் வேண்டும்.

"நிச்சயமாக எவர்கள் (இதற்குப் பின்னரும்) நம்பிக்கையாளர்களுக்கிடையே இத்தகைய மானக்கேடான வார்த்தைகளைப் பரப்ப விரும்புகிறார்களோ அவர்களுக்கு நிச்சயமாக இம்மையிலும் மறுமையிலும் மிக்க துன்புறுத்தும் வேதனை உண்டு". (அல்குர்ஆன் 24:19)

**5. பண்பாடு பேணல் (கனிவான வார்த்தைப் பிரயோகங்கள் ஊடாக செய்திகளை வெளியிடக் கூடியவை)**

* எந்தவொரு தகவலையும் நெறி தவறாமல் பண்பாடான முறையில், கீழான உணர்வுகளைத் தூண்டாத, குரோதங்களை பகைமைகளை வளர்க்காத நாகரிகமான வார்த்தைப் பிரயோகங்கள் கடைப்பிடிக்கப்பட வேண்டும்.

"தீய வார்த்தைகளைக் கூறி கூச்சலிடுவதை அல்லாஹ் விரும்புவதேயில்லை" (அல்குர்ஆன் 4 : 148)

**(மேலுள்ளவற்றுள் ஐந்து விடயங்களைக் குறிப்பிட்டு சுருக்கமாக விளக்கியிருப்பின் 5 புள்ளிகள்)**

7. பின்வருவனவற்றுள் எவையேனும் இரண்டிற்குச் சிறுகுறிப்பு எழுதுக.

(i) அல்-குர்ஆன் தொகுக்கப்படல்

(ii) ஸுன்னாவின் முக்கியத்துவம்

(iii) இத்தாவின் வகைகள்

(iv) ரீ. பீ. ஜாயாவின் கல்விப் பங்களிப்புகள்

(i) அல்-குர்ஆன் தொகுக்கப்படல்

* அபூபக்கர் (ரழி) ஆட்சியை ஏற்றதும் பல பிரச்சினைகள் தோற்றம் பெற்றமை.
* முஸைலமா எனும் போலி நபிக்கு எதிரான யமாமா யுத்தத்தில் 70 ஹாபிழ்கள் கொல்லப்பட்டமை.
* ஹாபிழ்களின் மரணத்தை தொடர்ந்து அல்குர்ஆன் அழிந்து போகும் என அச்சத்தை உமர் (ரழி) கலீபாவிடம் தெரிவித்து குர்ஆனை ஒன்று திரட்டுமாறு வழியுறுத்தியமை.
* ஆரம்பத்தில் தயக்கம் காட்டிய கலீபா பின் ஏற்றுக்கொண்டு, ஸைத் பின் ஸாபித் (றழி) யின் தலைமையில் ஒரு குழுவிடம் பொறுப்பை ஒப்படைத்தமை.
* ஸைத் இப்னு ஸாபித்(றழி), மஸ்ஜிதுந் நபவியின் வாயிலில் இருவரை நிறுத்தி சாட்சிகளுடன் ஒப்படைக்குமாறு அறிவித்தமை.
* மனனம், எழுத்து சாட்சிகள் மூலம் ஒவ்வொரு வசனமும் உறுதிப்படுத்தப்பட்டமை.
* இவ்வாறு தொகுக்கப்பட்ட ஏடு முஸ்ஹப் எனப் பெயரிடப்பட்டது.

**(ஐந்து விடயங்கள் குறிப்பிடப்பட்டிருப்பின் 5 புள்ளிகள்)**

(ii) ஸுன்னாவின் முக்கியத்துவம்

* அல்குர்ஆனை அடுத்து இரண்டாவது மூலாதாரமாகும்.
* ஸுன்னாவை பின்பற்றுமாறு அல்குர்ஆனும் ஸுன்னாவும் வலியுறுத்துகின்றன.
* சட்ட விதிகள் தொடர்பான விளக்கத்துக்கு ஸுன்னா அவசியப்படுகிறது.
* ஸுன்னாவை பாதுகாக்க ஸஹாபாக்களும் தாபிஈன்களும் எடுத்த முயற்சிகளும் அதன் முக்கியத்துவத்தைக் காட்டுகின்றது.
* இஜ்திஹாத் மேற்கொள்வதற்கு வழிகாட்டியாக உள்ளது.
• அல்குர்ஆன் கூறும் கருத்துக்களை மேலும் உறுதிப்படுத்துகின்றமை.
  உதாரணம் : தொழுகை , நோன்பு
• அல்குர்ஆன் கோட்பாடு ரீதியாக முன்வைத்தவற்றை ஸுன்னா நடைமுறைப்படுத்தி விளக்கியமை.
  உதாரணம் : தொழும் முறை, ஹஜ் செய்யும் முறை
• அல்குர்ஆன் பொதுவாக கூறியவற்றை ஸுன்னா வரையறுக்கிறது.
  உதாரணம் : களவெடுத்தவர்களது கைகளை வெட்டும் விடயம் தொடர்பாக
• அல்குர்ஆன் கூறாத புதிய சட்டங்களை ஸுன்னா முன்வைத்தல்.
  உதாரணம் : ஸுன்னத் தொழுகைகள் , ஜனாஸாத் தொழுகை.

**(இவை போன்ற ஐந்து கருத்துக்கள் விளக்கியிருப்பின் 5 புள்ளிகள்)**

(iii) இத்தாவின் வகைகள்

* கணவனின் இழப்புக்காக அல்லது பிரிவுக்காக சட்டவிதிகளுக்கமைய மனைவி குறிப்பிட்ட சில காலத்துக்கு சில நியதிகளுக்கு கட்டுப்பட்டிருப்பதை இது குறிக்கும்.

**1. கணவனின் மரணத்திற்கான இத்தா:**
கணவன் மரணித்தால் அவருடைய மனைவி இத்தா அனுஷ்டிப்பது கடமையாகின்றது. பருவம், வயது வேறுபாடின்றி அனைவரும் நான்கு மாதங்களும் பத்து நாட்களும் இத்தா அனுஷ்டிக்க வேண்டும். "உங்களில் எவரேனும் மனைவியை விட்டு மரணித்தால் அம்மனைவியர் நான்கு மாதம் பத்து நாட்கள் இத்தா அனுஷ்டிக்கட்டும்". (2 : 234)

**2. கர்ப்பிணியின் இத்தா:**
கணவன் மரணிக்கும்போது மனைவி கர்ப்பிணியாக இருந்தால் அவளது இத்தாக் காலம் பிரசவம் நிகழும் வரையிலாகும். "...கர்ப்பிணியான பெண்களுக்கு அவர்களுடைய (இத்தாவின்) தவணை அவர்கள் பிரசவிக்கும் வரையிலாகும்..." (65: 4)

**3. விவாகரத்துக்கான இத்தா:**
தலாக் சொல்லப்பட்ட பெண்கள் மூன்று குறூஉகள் இத்தா அனுஷ்டிக்க வேண்டும். "தலாக் கூறப்பட்ட பெண்கள் மூன்று மாதவிடாய் வரும் வரை காத்திருங்கள். (2 : 228)

**(மூன்று வகைகளும் குறிப்பிடப்பட்டிருப்பின் 2 புள்ளிகள், வகைகள் மூன்றும் விளக்கப்பட்டிருப்பின் 5 புள்ளிகள்)**

**(iv) ரீ. பீ. ஜாயாவின் கல்விப் பங்களிப்புகள்**

* மலாய் இனத்தைச் சேர்ந்த இவர் 1890 இல் கண்டி கலகெதரவில் பிறந்தார்.
* ஆரம்பக்கல்வியை கண்டி புனித பவுல் கல்லூரியிலும் பின் கொட்டாஞ்சேனை செந்தோமஸ் கல்லூரியிலும் கற்றார்.
* 1910 இல் கண்டி தர்மராஜ கல்லூரியின் உதவி ஆசிரியராக, பின் மொறட்டுவ பிரின்ஸ் ஒப் வேல்ஸ் கல்லூரியின் மேலைத்தேய இலக்கிய ஆசிரியராக நியமனம் பெற்றார்.
* 1916 இல் கலைப்பட்டதாரியான பின்னர் 1917 இல் கொழும்பு ஆனந்த கல்லூரி ஆசிரியராக பணிபுரிந்தார்.
* 1921 இல் இக்கட்டான நிலையிலிருந்த கொழும்பு ஸாஹிராவை பொறுப்பேற்று இரண்டு தசாப்தங்களுக்குள் அன்று கொழும்பில் காணப்பட்ட பிரபல்ய பாடசாலைகளுக்கு நிகராக மாற்றினார்.
* 1930 இற்குப் பின்னர் ஏற்பட்ட 2ஆம் உலக மகா யுத்தம் காரணமாக கொழும்பு ஸாஹிரா இராணுவ வீரர்களின் தங்குமிடமாக மாறியதை வாய்ப்பாக பயன்படுத்தி கொழும்புக்கு வெளியில் பல நகர்களில் ஸாஹிராவின் கிளைகளைத் தோற்றுவித்தார்.
* கராச்சிப் பல்கலைக்கழகம் இவருக்கு கலாநிதிப்பட்டம் வழங்கி கௌரவித்தது.
* 1960 இல் இலங்கை ஹஜ்ஜாஜிகள் தங்குவதற்கு விடுதி நிறுவுவது சம்பந்தமாக கலந்துரையாட ஸவூதி சென்றவர் அங்கு சுகவீனமுற்று வபாத்தாகி ஜன்னதுல் பகீயில் நல்லடக்கம் செய்யப்பட்டார்.

**(இவை போன்ற ஐந்து விடயங்கள் விளக்கப்பட்டிருப்பின் 5 புள்ளிகள்)**